9th August 1960]

SRI A. VEDARATHNAM : இங்கிருந்து அந்த இரும்பை வெளியே கொண்டுபோகும் நேரத்திலே, அதை மறுபடியும் நம் முடைய இராஜ்யத்திலே கொண்டுவந்துதான் விநியோகிக்க வேண்டுமென்ற ஒரு நிபந்தனையின்பேரில் அவர்கள் இந்த மா நிலத்திலிருந்து வெளியே எடுத்துச் செல்வதற்கு அனுமதி கொடுக்க முடியாதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவ்விதமான அதிகாரம் சர்க்காருக்கு இல்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : எடுக்கப்பட்ட தண்ட வாளங்கள் ஏராளமான ஸ்டாக் சென்னையிலேயே இருக்கிறது என்று சர்க்காருக்குத் தெரியுமா ? இதற்குத் தனிப்பட்ட விலை நிர்ணயிக்கப்பட்டிருப்பதால் அந்த விலைக்கு அதிகமாக அவர்கள் விற்க முடியாது என்றும் சர்க்காருக்குத் தெரியுமா ? இதைப் பயன்படுத்த முடியும் என்றால், அதுபற்றி சர்க்கார் ஏதாவது முயற்சி எடுத்துப் பார்த்ததா ?

THE HON. SRI R. VENKATARAMAN: இதைப் பயன்படுத்து வதாக சர்க்காருக்கு இப்பொழுது யோசனை இல்லை. கனம் அங்கத்தினர் சொல்லிய மற்ற விஷயங்களையெல்லாம் நான் தகவ லாக எடுத்துக்கொள்ளுகிறேன்.

*Schemes for the welfare of women and children*

*58 SRI P. G. MANICKAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப் பாரா—

(அ) சென்னை செகரடேரியட்டில் 1960-ம் வருடம் மே மாதம் 18-ந் தேதி ராஜ்ய சமூக ஷேம நல போர்டுடன், அபி விருத்திக் கமிஷனர் திரு. ஆர். ஏ. கோபால்சாமி அவர்கள் புதிய பஞ்சாயத்துச் சட்டத்தின் விளைவாக பெண்கள், குழந்தைகளுக் கான எதிர்கால வேலைத்திட்டத்தைக் குறித்து பரிமாறிக் கொண்ட கருத்துக்கள் நம் ராஜ்ய சர்க்காரின் பரிசீலனைக்குக் கொண்டுவரப்பட்டதா ?

(ஆ) இக் கருத்துக்களின் மீது நம் ராஜ்ய சர்க்காரால் பரி சீலனை செய்யப்பட்டு ஊர்ஜிதம் செய்யப்பட்ட நடவடிக்கை களின் விவரங்கள் யாவை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes, Sir.

(ஆ) The matter is under examination.

*Union official language*

* 59 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state whether the Government have made any further representation to the Union Government regarding the Union official language?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.